

# திருக்குறள்

**பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை**
**எல்லா அறமும் தரும்** *(வாய்மை 296)*

பொய் கூறாமைக்கு இணையான புகழ்தரும் பண்பு வேறொன்று இல்லை. மெய்கூறுவது அனைத்து அறங்களுக்கும் வேராக இருக்கும்..

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### கற்பகச் சக்கரம்

**அகரம் எழுத ஆரம்பித்த**
**ஆதிநாளில்**
**எமது குடை நிழல்**
**பொன் பச்சை அரசமரம்தான் புகல்.**
**கரும் கல் பிள்ளையார்**
**நறுமணத் திருநீறுடன் ஒரு புறம்**
**புகைமணத்துடன்**
**ஆடுபுலி ஆடுவோர் மறுபுறம்.**
**நம்பிக்கை நாயகர்**
**தும்பிக்கை மூலவர்**
**பல்லவர் காலத்தின் பெருநிதி**
**வல்லப வரசக்திக் கணபதி**

**விடுதலைப் போராட்டத்தில்**
**வீதிக்கொரு வீரசக்தி விநாயகர்**

**பாரதியின் கற்பகக் கடவுள்**
**பரவெளியிலும் இருப்பார்**
**சிறைச்சாலையிலும் இருப்பார்**
**மோனநிலையில் இருப்பார்**
**ஓம்காரத்தின் உள்ளே இருப்பார்**
**அன்றும் இன்றும் அவரே வழிக்குத்துணை**
**ஆனைமுக விழியிரண்டும் அற்புதக் கருணை மழை**

**அரச இலைக்குள்ளும் சுழல்கிறது**
**பரிபூரண விடுதலைச் சக்கரம்**
**போதிமரத்தடி தியான மந்திரம்**
**வந்தே மாதரம்.**

மதுரை மேலமாசி, வடக்கு மாசி வீதிகளின் சந்திப்பில் ஓர் அரசமரத்தடிப் பிள்ளையார் நேரு ஆலால விநாயகர். தேசபக்தி ஊட்டி வரமளித்தவர். கணபதி விழா தேசபக்தி விழாவாக உருவெடுத்துள்ளதை வரலாறு பேசுகிறது. நாம் எடுக்கும் அனைத்துப்பணிகளிலும் தேவதேவனே கணநாதனே முன்னின்று அருளவேண்டும் . ஔவை முதல் பாரதிவரை நமக்காக விநாயகரிடம் அவர்கள் வேண்டிக்கொண்டவற்றை இப்போது நினைவு கூர்வோம். பக்திப் பரவசத்துடன் வணங்குகிறேன்.



இரா.மீனாட்சி

## அன்னையின் பிரார்த்தனை



*இறைவா, என் நித்திய நாதனே, என் சிந்தனை சக்தியற்று ஊமையாய் நின்முன் கிடக்கிறது. ஆனால் என் இதயம் உன்னை வாவாவென்றழைக்கிறது. எனது ஜீவன் முழுவதையும் விழித்தெழச்செய்; அது முற்றிலுமாக நினக்குத் தேவையான கருவியாக, தனது குறையற்ற பணியாளாக இருக்கட்டும். எல்லையில்லாதபடி எல்லாப் பொருள்களிலும், நீயாகவே, முழுமனமாக, முழு இயக்கமாக இருக்க விரும்புகிறது என் ஆர்வம். எல்லாவற்றையும் தன்னுள் கொண்டதும், எல்லாவற்றிலும் தான் இருப்பதுமான அந்த ஒன்றாக ஆகவேண்டும். வேறெதுவுமின்றி அதுவாகவே ஆகவேண்டும். எல்லா வரம்புகளிலிருந்தும் எல்லாக் குருட்டுத்தனத்திலிருந்தும் விடுபடவேண்டும். அனைத்தையும் வெல்பவனே, எல்லாத் தடைகளையும் வென்றிடச் செய்வாய்..*

**ஸ்ரீஅன்னை**

**ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!**
**ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று!**
**ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!**
**ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று!**
**ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!**
**சங்கு கொண்டே வெற்றி ஊதுவோமே! -**
**இதைத் தரணிக்கெல்லாமெடுத்து ஓதுவோமே!**

**15 ஆகஸ்டு 2022**
**ஸ்ரீஅரவிந்தரின் பிறந்தநாள் – 150 ஆண்டு**
**இந்திய சுதந்திரத்திருநாள் – 75 ஆண்டு.**
**கொண்டாடுவோம்.**

# புதுவையில் பாரதி சில நிகழ்வுகள்

பாரதி - I

ஸ்ரீஅரவிந்தர் வ.வே.சு.அய்யர், மண்டயம் சீனிவாசாச்சாரி போன்ற ஒத்த தோழமை உள்ளம் கொண்டவர்களை மட்டுமின்றி தமது கவிவாக்காலும் உயர்ந்த சமூகக் கருத்துகளாலும் புதுவையில் பல உள்ளூர் மக்களையும் பாரதி கவர்ந்திருந்தார். குறிப்பாக பொன்னு முருகேசன் பிள்ளை, கலவை சங்கரஞ்செட்டியார், ஆறுமுக செட்டியார் போன்ற புதுவை முக்கியஸ்தர்கள்; சுவாமிநாத தீட்சிதர், என். சுப்பிரமணிய அய்யர் போன்ற பேராசிரியர்கள் எல்லாருமே மிகுந்த நட்புப் பாராட்டினார்கள். இங்கு குறிப்பிடப்படும் அனைவருமே நடுவயதினர் - பாரதியாருக்கு மூத்தவர்கள் ஆவர். வி. ராமசாமி அய்யங்கார் (வ.ரா) கனக சுப்புரத்தினம் (பாரதிதாசன்) ராஜாபாதர், கனகராஜா, வேணுகோபால், கோவிந்தசாமி ஆகியோர் எந்த நேரமும் பாரதியாருடன் இருந்த இளைஞர்கள் தொண்டர்படை, அவருடைய மெய்க்காவலர் என்றே கூறுவார்கள். இவர்களுள் வ.ரா. உரைநடை எழுத்திலும், பாரதிதாசன் கவிதையிலும் பிரகாசித்தார்கள்.



ஈஸ்வரன் தர்மராஜா கோவில் தெருவில் பொன்னு முருகேசம்பிள்ளை வீட்டருகேதான் பாரதியாரின் வீடும் அமைந்திருந்தது. அன்றைய புதுச்சேரி பிரெஞ்சு அரசியலில் அவர் மறுமலர்ச்சிக் கட்சியில் இணைந்திருந்தார். பாரீஸிலும் அவருக்கு நெருங்கிய நண்பர்கள் இருந்தார்கள். பிள்ளையின் வீட்டிலேயே பல பொழுதுகள் பாரதி தங்கி, உணவருந்தி வெற்றிலை போட்டு, ஊஞ்சலாடி, கவிதைபாடி, உரையாடி மகிழ்ந்திருப்பது வழக்கம். முருகேசம் பிள்ளையின் மனைவி அண்ணியம்மாள் நல்ல குணவதி. பாரதி-செல்லம்மாள் குடும்பத்தினரின் நிலையறிந்து உதவி செய்யக்கூடிய பரோபகாரி. முருகேசம் பிள்ளை அண்ணியம்மாள் இணையருக்கு இரு குமாரர்கள் மூத்தவர் ராஜாபாதர் இளையவர் கனகராஜா. பாரதியின் பாடல்களையும் கதைகளையும் இரசித்து மகிழ்கிறவர்கள். ராஜாபாதர் முதலாம் மகாயுத்தத்திற்கு முன்னரே தனது பொறியியல் மேற்கல்விக்காகப் பாரீஸ் சென்றிருந்தார். உலகயுத்தம் மூண்ட சமயத்தில் தனது கல்வியை முடித்துக்கொண்டு ஊர் திரும்பிக்கொண்டிருந்தார். மூத்த மகனின் வரவை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார் பொன்னுமுருகேசம்பிள்ளை. என்ன கொடுமை! ராஜபாதர் வந்த கப்பல்மீது ஜெர்மன் குண்டுமழை பொழிந்து சுக்கு நூறானதாகச் சொல்லி ஒரு தந்தி வந்தது. முருகேசம் பிள்ளையும், அண்ணியம்மாளும் இடிந்து போனார்கள். பிள்ளை அவர்கள் மனம் ஒடிந்து நோயில் விழுந்தார். பாரதி இச்செய்தியை ஸ்ரீஅரவிந்தரிடம் சொல்லி முருகேசம் பிள்ளைக்கு ஆறுதல் வேண்டியதாகத் தெரிகிறது. முருகேசம் பிள்ளையின் மனதை தைரியப்படுத்த ராஜாபாதர் உயிருடன் இருப்பதாக ஒரு தந்தியைத் தயாரித்து அனுப்பியதோடு ராஜபாதரைப் போலவே ஒரு இளைஞரை உடையணியவைத்து அவர் முன்னே அழைத்து வந்து காட்டினார் பாரதி. அப்படியும் முருகேசம்பிள்ளை நம்பவில்லை. முதுகு காட்டி திரும்பிப் படுத்தார். உயிர் பிரிந்தது.

ஆயினும் ஸ்ரீஅரவிந்தரும் பாரதியாரும் வேண்டியது போலவே தந்தையின் மறைவுக்குப்பின் - எண்ணி 27 ஆம் நாள் ராஜாபாதர் உயிருடன் திரும்பி வந்தார். இது பாபர் ஹுமாயூன் கதைபோல அமைந்து விட்டதே மகன் நலமுடன் வந்து சேர தந்தை உயிர்த்தியாகம் செய்து விட்டாரே“ என்று பாரதியார் கூறினார்.

பிற்காலத்தில் ராஜாபாதர் (ராஜாபகதூர்) பாண்டிச்சேரி லெஜிஸ்லேடிவ் கவுன்சிலின் செயலராகப் பணியாற்றினார். 1950-களின் ஆரம்பத்தில் மறைந்தார். அவருடைய மகனுக்கு ராஜாபாதர் இட்ட பெயர் முருகேச பாரதி!

ஆங்கிலக்கட்டுரை.The Indian Review – August – 1982

By R. A. Padmanabhan.

# மகாகவி பாரதியார் போற்றிய பிரம்ம பாந்தவர்

பாரதியார், பாரததேவியின் அடிமை என்று ஒரு பாடல் எழுதியிருக்கிறார்.

அந்தப் பாடலில் அவர் 1. திலகர் 2. பூபேந்திரர் 3. பிபின்சந்திரபால் 4.பிரம்மபாந்தவன் ஆகியவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இவர்கள் நான்கு பேரும் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்துடன் தொடர்புடையவர்கள்.

**பல்லவி**

அந்நியர்தமக் கடிமை யல்லவே – நான்
அந்நியர்தமக் கடிமை யல்லவே

**சரணங்கள்**

மன்னி யபுகழ்ப் பாரத தேவி
தன்னிரு தாளிணைக் கடிமைக் காரன் (அந்)

இலகு பெருங்குணம் யாவைக்கு மெல்லையாம்
திலக முனிக்கொத்த அடிமைக்காரன் (அந்)

வெய்ய சிறைக்குள்ளே புன்னகை யோடுபோம்
ஐயன் பூ பேந்த்ரனுக் கடிமைக் காரன் (அந்)

காலர்முன் னிற்பினும் மெய்தவறா வெங்கள்
பாலர்த மக்கொத்த அடிமைக் காரன் (அந்)

காந்தன லிட்டாலும் தர்மம்விடா ப்ரம்ம
பாந்தவன் றாளிணைக் கடிமைக் காரன் (அந்)

பாரதியார் கவிதைகளில் கூறியதன் உரைநடை வடிவம் வருமாறு.

அந்நிய நாட்டினருக்கு அடிமை இல்லையே, நான் அந்நிய நாட்டினருக்கு அடிமை இல்லையே.

- உலகில் புகழ்பெற்று விளங்கும் பாரத தேவியின் இரண்டு பாதங்களுக்கு நான் அடிமைக்காரன்.
- பெருந்தன்மையான குணங்கள் அனைத்திற்கும் எல்லையாக இருப்பவர் பாலகங்காதர திலக முனிவர். அவருக்கு நான் அடிமைக்காரன்.
- கொடிய சிறைச்சாலைக்குள் புன்சிரிப்புடன் சென்ற ஐயன் பூபேந்திரனுக்கு நான் அடிமைக்காரன்
- மரணதேவனான யமனே முன்னால் வந்து நின்றாலும், சத்தியம் தவறாத எங்களுடைய விபின் சந்திரபாலருக்கு நான் அடிமைக்காரன்
- தன்னைச் சுடுகின்ற நெருப்பில் தூக்கிப்போட்டாலும், தர்மத்தை விடாமல் பிடித்திருப்பவர் பிரம்ம பாந்தவ உபாத்தியாயர். அவருடைய இரண்டு திருவடிகளுக்கும் நான் அடிமைக்காரன்.

**நன்றி – சுவாமி கமலாத்மானந்தர் | ஓம் சக்தி ஏப்ரல் – 2014.**



## நமது நூலகம்
# பாரதி வாழ்வினிலே.....

பாரதியாருக்குத் திருமணம் நடக்கும்போது அவருக்கு வயது 14½ அவரது மனைவி திருமதி செல்லம்மாள் பாரதிக்கு வயது 7. கல்யாணம் ஆன புதிதில் மனைவியும் கணவனும் சந்தித்துப்பேசும் வழக்கமில்லாத அந்தக் காலத்தில்கூட பாரதியார் துணிந்து மனைவியை எல்லார் எதிரிலும்

தேடக்கிடையாத சொர்ணமே – உயர்ச்
சித்திரமே மட அன்னமே
கட்டியணைத்தொரு முத்தமே – தந்தால்
கைதொழுவேன் உனை நித்தமே“

என்று பாடினாராம்.!



கடையநல்லூர் அருகிலுள்ள சிற்றூரான பொட்டல்புதூரிலிருந்து கூட்டங்கூட்டமாக முஸ்லீம் நண்பர்கள் வந்து பாரதியாரின் “குர்ஆன்” உபதேசமொழிகளைக் கேட்டு ஆனந்தமடைந்து செல்வது வழக்கம். பாரதியாரின் மதச்சாற்பற்ற விசாலமனப்பான்மையையும் அவரது சொற்களிலே மிளிரும் உண்மை ஒளியையும் கண்ட முஸ்லிம் நண்பர்கள் அவரைத் தம் சிற்றூருக்கு வந்து பிரசங்கம் நிகழ்த்துமாறு வேண்டினர். அவ்வாறே பாரதியாரும் இஸ்லாம் மதத்தின் மகிமை என்று பற்றி பிரசங்கம் செய்துவிட்டு தாம் இயற்றிய “அல்லா“ பாடலைப் பாடினார் அதைக் கேட்ட முஸ்லிம் நண்பர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

**அல்லா**

**பல்லவி**

அல்லா, அல்லா, அல்லா

**சரணங்கள்**

பல்லாயிரம் பல்லாயிரம் கோடி கோடி யண்டங்கள்
எல்லாத் திசையிலுமோ ரெல்லை யில்லாவெளி வானிலே!
நில்லாது சுழன்றோட நியமஞ் செய்தருள் நாயகன்
சொல்லாலும் மனத்தாலும் தொடரொணாத பெருஞ் சோதி
(அல்லா அல்லா அல்லா)

கல்லாதவராயினும் உண்மை சொல்லாதவராயினும்
பொல்லாதவராயினும் தவமில் லாதவ ராயினும்



நல்லாருரை நீதியின்படி நில்லாதவ ராயினும்
எல்லாரும் வந்தேந்து மளவில் யமபயங்கெடச் செய்பவன்
(அல்லா அல்லா அல்லா)



வேடுவர்கள், மிருகங்கள் பயிர்களை அழிப்பதைத் தடுப்பதற்காக சாமிக்குப் பூசை போடுவார்கள். அப்படிச் பூசை போடும்போது ஒருவனுக்கு சாமி ஆவேசம் வந்து,

"பாக்கு வெச்சான் பழமும் வெச்சான்.
பொயிலை வெச்சான் வெத்தலை வெச்சான்
ஒன்னு வைக்க மறந்திட்டான்
சுண்ணாம்பில்லே சுண்ணாம்பில்லே"

என்று பாடினானாம். அதைக்கேட்ட பாரதியார் "கொல்" என்று நகைத்தாராம் அருகே இருந்தவர்கள் அதைப் பார்த்து "ஏன் நகைக்கிறீர்" என்று அவரைக் கேட்டதற்கு, "இந்தப்பாட்டு நமது நாட்டு மக்களுக்கும் ஒருவாறு பொருந்தும்."



"எப்படி" என்று அவர்கள் மறுபடியும் வினவ பாரதியார்,

தமிழ்மக்களுக்கு கடவுள் நிலமும் வச்சான்,
பலமும் வச்சான், நிகரில்லாத செல்வம் வச்சான்
ஒன்னு வைக்க மறந்திட்டான்
புத்தியில்லே புத்தியில்லே

என்று பாடினாராம். அதைக்கேட்ட நண்பர்கள் விழுந்து விழுந்து சிரித்தனர்.

பாரதி கண்ட பாரதம் | லலிதா பாரதி (பாரதியாரின் பேத்தி) | ஸ்ரீராம் டிரஸ்ட் | டிசம்பர் 1989.

# தமிழ்ப் பழமொழிகள்

## பை.

1. பை எடுத்தவன் எல்லாம் வைத்தியனா?
2. பைத்தியத்தைச் சுற்றிப்பத்துபேர்
3. பையத் தின்றால் பனையும் தின்னலாம்.
4. பைத்தியம் தெளிந்தால்தான் கல்யாணம்

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

# பாதமலரே! நம்மைக் காக்கும்

அரவிந்தர் – 1

உலக மக்கள் உய்ய வேண்டி
உலகைப்படைத்த இறைவன் ஆய்ந்து
கலக மின்றி மக்கள் வாழ
கருத்து ஒன்றி மகிழ்வில் ஆழ
திலக மென்னும் குணங்கள் கொண்ட
தியாக உள்ளம் கருணை யுள்ளம்
விலகத் துன்பம் அருளைத் தந்து
விரைந்து காக்கும் மகானைத் தந்தார்.

அவரின் நாமம் அரவிந்த ராகும்.
அரிய தவமே அவரின் நோக்கம்
எவரின் குரல் கேட்ட பொழுதே
இரங்கி அருள் துன்பம் போகும்
மலரின் வாசம் மனதில் வீசும்
மனதின் சோகம் மறைந்து போகும்.
பலரின் பக்தி பணிந்து பாடும்
பாத மலரே நம்மைக் காக்கும்.

கவிஞர் மா. சோதி. ஆர்க்காடு (நம்மடலின் நெடுநாள் வாசகர்.)

# வாசகர் குரல்

ஜூன் இதழில் தமிழறிஞர் நொபோரு கரோஷிமா பற்றிய செய்தி பயனுள்ளது. துபியான்சுகி குறிப்பிடத்தக்க செய்தி ஆனைக்கட்டிக்குப் போகவைத்து விட்டீர்கள்.!

கவிஞர் பெ.சிதம்பரநாதன்.கோவை.

ஜூன் மாத ஆரோவில் செய்திமடலில் முகப்பு ஓவியத்தில் இளைஞர்கள் கல்வி மையத்தைச் சிறப்பாக வரைந்திருக்கின்றார் இளம் கலைஞர் ஓவியர் பூஜா. ஒவ்வொரு இலையும் ஒவ்வொரு செங்கல்லும் ஓவியக்கவிதையாய் மெய்மையில் பேசுகின்றன.

வைத்தியர். கே.பி. செல்வம், புற்று மகரிஷி சித்த வைத்தியசாலை, வேலூர்.

ஜூலை – 2022 இதழ் வழக்கம்போல மிகவும் சிறப்பு. பாரத வரலாற்றில் முச்சுடர் ஒளிகள் என அரவிந்தர், பாரதியார், வ.உ.சி மூவரையும் பற்றிய ஆசிரியர் பக்கம் அரிய தகவல்களை அடையாளம் காட்டியது. அரவிந்தர் வ.உ.சிக்கு எழுதிய பாராட்டுரையை முதன்முதலாக வாசித்தறியும் வாய்ப்புக்கிடைத்தது. விடுதலைப் போராட்டத்தில் மூவரின் கூட்டுப்பங்களிப்பையும் தெரிந்துகொள்ள முடிந்தது.

கவிஞர் வில்லியனூர் பழநி புதுச்சேரி

# பழமொழி தமிழில்

நமது நூலகம்

பழமொழிகள் நுட்பமான பொருள்களைத் தம்முள்ளே கொண்டிருக்கும். சொல்லில் சுருக்கமும், கேட்பவர் உள்ளத்திலே ஒளிபரப்பும் தன்மையும் ஒண்மையும் கொண்டு விளங்கும். இப்படி குறித்த ஒரு பொருளை விளக்கி முத்தாய்ப்பாகக் கூறுவதற்கு வருவன முதுமொழிகள் எனப்படும் பழமொழிகள் ஆகும். இதனைத் தொல்காப்பிய இலக்கண நூலும் எடுத்துரைக்கிறது.

**"நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்**
**ஒண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்**
**குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்**
**ஏது நுதலிய முதுமொழி என்ப"**

இத்தகைய பழமொழிகளை அன்றாட வாழ்க்கையில் பேச்சுவழக்கிலும் நாம் கேட்டறிகிறோம். ஆனால் பழமொழிகளையே முழுவதுமாக அடிப்படையாகக் கொண்டு மக்களின் வாழ்வியக்கத்தை விளக்குவதற்காக ஒரு தனித்த நூலினை உருவாக்கியுள்ளார் சங்ககாலப் பெரும் புலவர் முன்றுறையரையனார். ஏட்டில் இருந்த பழமொழி நானூறு நூலினை முதன் முதலில் அச்சிட்டவர்கள் சோடசாவதானம் சுப்புராயச் செட்டியார் (1874). அடுத்து தி.ச. ஆறுமுகநயினார் பதிப்பு (1904) திருமணம் செல்வக் கேசவராய முதலியார் பதிப்பு (1914) என வெளிவந்தது. திரு நாராயண அய்யங்கார் 200 பாடல்கள் பதிப்புகள் 1918, 1922 இல் வெளியாயின. ஆனால் அகரவரிசைப்படி பழமொழிகளை விளக்கும்படி யாக ஒரு பொதுநிலையிலே வைத்து எளிதில் படிக்கும்படியாக உரையுடன் அச்சிட்டார் புலியூர்க் கேசிகன் அதன் இரண்டாம் பதிப்பு 1964-இல் வெளிவந்தது. நமது நூலகத்தில் இத்தொகுப்பு அரைமஞ்சள் தாளில் அமைதியாக வீற்றிருக்கிறது. இப்பழைய நூலிலிருந்து பதம் பார்க்க ஒரு பாடல்.

**எந்நெறியானும் இறைவன்றன் மக்களைச்**
**செந்நெறிமேல் நிற்பச் செயல்வேண்டும் – அந்நெறி**
**மான்சேர்ந்த நோக்கினாய்! ஆங்க அணங்காகும்**
**தான் செய்த பாவை தனக்கு**

ஒரு தகப்பன் எந்த வகையிலேயானாலும் தன் மக்களைச் செம்மையான நெறியிலேயே மேம்பட்டு நிற்குமாறு அதற்குத் தகுதியானவற்றையே செய்தல் வேண்டும். தான் செய்த பாவையே ஒரு சிற்பிக்குப் பின்னர் தெய்வமாவது போல, அப்படிச் செந்நெறியிலே மக்களை நிலையாக நிற்கச் செய்தால் அம்மக்கள் பிற்காலத்தில் தந்தையாலும் போற்றப்படும் உயர்ந்த பெருநிலையினை அடைவார்கள். மக்களைச் செந்நெறிமேல் செல்லுதலில் தகுதியுடையவர் ஆக்குதல்தான் ஒரு தந்தையின் கடமை. **அணங்காகும் தான் செய்த பாவை தனக்கு.** அதுவே, முத்தாய்ப்பாக அமைந்துள்ளது இச்செய்யுளில் – பழமொழியாக.

**– பத்மினி, இளைஞர்கள் கல்வி மையம்.**

---

**புதுவரவு – நன்றியுடன்**

**திங்கள் இதழ் – 1 ஜூன் 2022**

# தொண்டை நாட்டுப் பயணம்

தொண்டை நாட்டு உழவர்களுக்காகச் சமர்ப்பிக்கப்பட்டுள்ள நிறைய பழைய புதிய சான்றோர் நாட்டுச் சங்கதிகளை நிரப்பியுள்ள கனமான 100 பக்க இதழ். பாலாறு, ஜவ்வாதுமலை, ஏலமலை, திரையன்ஏரி, வெள்ளையரின் படைவீடு பற்றிய வரலாற்றுத் தகவல்களுடனும் இப்பகுதியின் பெருமை மிகுப் பேரறிஞர்களின் பங்களிப்புப் பற்றியும் "பயணம்" விவரமாகப் பேசுகிறது. இம்மடலினை நமக்கு அறிமுகம் செய்துள்ளவர் சிறப்பாசிரியர்களுள் ஒருவரான கல்விச் சிந்தனையாளர், மொழிப்புலவர், இயற்கை வேளாண் செயற்பாட்டாளர். திரு.முகில்வண்ணன் ஆவார். நன்றி.

---

# படித்ததில் ஈர்த்தது

ஒரு சமயம், டாக்டர் அப்துல் கலாமைச் சந்தித்தார், யூசி என்ற சீனக்கவிஞர். அப்போது, திருக்குறளையும் அதன் ஆங்கில மொழிபெயர்ப்பையும் அவரிடம் வழங்கி, "படித்து, பிடித்திருந்தால் திருக்குறளை சீன மொழியில் வெளியிடுங்கள்...." எனக் கேட்டுக்கொண்டார் கலாம்.

திருக்குறளை, ஐந்து ஆண்டுகளாகப் படித்து வந்த யூசி, அதன் ஈரடி வழங்கிய ஆழத்தைக் கண்டு, 2011-ல் உலகக் கவிஞர்கள் மாநாட்டில், கலாம் முன்னிலையில், திருக்குறளை சீன மொழியில் வெளியிட்டுச் சிறப்பித்தார். திருக்குறளை சீன மொழிக்குக் கொண்டு சென்ற பெருமை. அமரர் கலாம் அவர்களையே சாரும்.

**நன்றி – தினமலர் வாரமலர். ஜூலை 24, 2022.**

அரவிந்தர் – II

# புதுவையில் ஸ்ரீஅரவிந்த வாசம் தொடங்கியபோது

1910 ஏப்ரல் மாலை 4 மணியளவில் கடற்கரை கோர்சாப்ரல் (COURS CHABROL) கட்டுத்துறையில் இறங்கிய ஸ்ரீமான் அரவிந்த கோஷ் குதிரை வண்டியில் அழைத்துச் செல்லப்பட்டார். கூடவே மண்டயம் ஸ்ரீனிவாசாச்சாரியாரும் கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரும் பயணித்தனர். அப்போது அரவிந்தருக்காக கலவை சங்கரஞ் செட்டியார் வீட்டில் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதாகக் கூறினார்கள். யாருக்கும் தொல்லைதர விருப்பமில்லாத நிலையில் தனியாக தங்குவதற்கு ஏற்பாடு செய்து கொள்ள இயலாதா என்று "பாபு" கேட்டதும் இரு நண்பர்களும் சிறிது கவலையுற்றனர். எப்படியும் ஓர் இரவு இருந்து பார்த்தபின் முடிவு செய்யலாம் என்று கூறியதை அரவிந்தபாபு ஏற்றுக்கொண்டார். அவருடன் மோனி, பிஜோய் எனும் இரு வங்க இளைஞர்கள் துணைக்குத் தங்குவதென முடிவாயிற்று.

சங்கரஞ்செட்டியாருக்குச் சொந்தமான எண்.39 கோமுட்டி வீதி (தற்பொழுது கல்வே சுப்புராயன் செட்டி வீதி) வீட்டில் தங்க வைக்கப்பட்டார். மறுநாள் காலையில் அரவிந்தபாபு இவ்வீட்டில் எத்தொல்லையுமின்றி தனிமையாக மேல்புறத்தில் இருக்க வசதியாக இருப்பதாகச் சொல்லியதால் புதுவை நண்பர்கள் மனநிறைவடைந்தார்கள்.

முதல் மூன்று மாதங்கள் பாபுவோ அவரது இரு சீடர்களோ வீட்டைவிட்டு எங்குமே வெளியேறவில்லை. குளியல்போட கீழ்தளத்திற்கு ஒருமுறை வந்து செல்வதோடு சரி. நடுதளத்தில் மேலே சுத்தமான கழிப்பறை வசதியாக இருந்தது. பின்புறத்தில் சிலபடிகள் இறங்கினால் தனிச் சமையல்கட்டு. எனவே இவர்களது இருப்பை யாராலும் வெளியில் தெருவில் இருந்து பார்த்துத் தெரிந்துகொள்ள இயலாதபடி தனிமையான பாதுகாப்புச் சூழ்நிலையில் தங்கிக்கொள்ள இயன்றது. படுத்துறங்க பாபுவிற்கு ஒரு மெல்லிய துணி மெத்தை, இளைஞர்களுக்கு நம் நாட்டிற்கே உரிய கோரைப்பாய்கள் என்று சீடர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

செட்டியார் புதுவையில் கௌரவ மாஜிஸ்டிரேட்டாகவும், முக்கியமான வணிகப்பிரமுகராகவும் விளங்கினார். எனவே பாதுகாப்பான வீடாக அமைந்தது. மாடியறையில் ஒரே ஒரு சாய்வு நாற்காலி மட்டும் இருந்தது.



அரவிந்த பாபுவும் கீழே அமர்ந்துகொள்வது உண்டு. தினசரி மாலையில் ஸ்ரீனிவாசாச்சாரியார், பாரதியார் மற்றும் ஓரிருவர் உடன் அமர்ந்து உரையாடுவது வழக்கமாயிற்று.

அடுத்ததெரு காமாட்சி அம்மன் கோபுரம்மேல் ஏறி பிரிட்டிஷ் அரசாங்க ஒற்றர்கள் புதிய போராட்டவாதிகளைக் கண்காணிக்க முயன்றார்களாம். கலவை சங்கரஞ்செட்டியார் வீட்டின் மக்கள் நடமாட்டத்தை அறிந்துகொள்ள இயலாதபடி அம்மாளிகை அமைந்திருந்ததாம். கலவை சங்கரஞ்செட்டியார் வீடு ஒரு தனித்துவமான மூன்றடுக்குத் தளமுடையது. புதுவையில் அந்தக் காலத்தில் மாளிகை போன்றது.

இதே வீட்டிற்குத்தான் பிரெஞ்சு அரசியல் பிரமுகர் சட்ட நிபுணர் பால்ரிஷ்சர் (ரிச்சர்டு) அவர்களைக் கவிபாரதியாரும், ஸ்ரீனிவாசாச்சாரியாரும் அழைத்து வந்து ஸ்ரீஅரவிந்தரைச் சந்திக்கச் செய்தனர். பால்ரிஷ்சரும் ஸ்ரீஅரவிந்தரும் யோக சாதனைகளைப் பற்றியும் ஆன்மிக அனுபவங்களைப் பற்றியும் உரையாடியதாக அறியவருகிறோம். இந்த நேரடித்தொடர்புதான் பால் ரிஷ்சரின் துணைவியார் திருமதி மிர்ரா அல்போஸா (ஸ்ரீஅன்னை) புதுவைக்கு வரக்காரணமான திருப்புமுனை நிகழ்வானதாகும்.

கலவை சங்கரஞ்செட்டியார் மனை மற்றொருவகையிலும் புகழ் பெற்றிருந்தது. ஸ்ரீமான் அரவிந்தகோஷ் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்து இந்திய மண்ணில் காலடிவைத்த சில வாரங்களுக்கு முன்னர் 1893 ஜனவரியில் வீரஞானி விவேகானந்தர் தமது பாரதப் பயணத்தின்போது புதுவைக்கும் வந்தார். அப்போது இதே வீட்டில்தான் தங்கியதாக அறிகிறோம்!

– இந்துமதி நிர்மல், கோட்டைக்கரை

# கவியோகி சுத்தானந்த பாரதியாரும் மகான் ஸ்ரீஅரவிந்தரும்



தமிழிலக்கிய வரலாற்றில் நிறையப் பாரதிகள் உண்டு. ஆனால் தமிழன்னைக்குப் பிடித்தமான பாரதிகள் இருவர் மட்டுமே. ஒருவர் மகாகவி பாரதியார். மற்றொரு கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார். தமிழ்மொழியின் காப்பியங்களை அணிகலன்களாகத் தமிழன்னைக்குச் சூட்டி அழகுபார்த்தவர் சுத்தானந்த பாரதியார். தவவாழ்வாம் துறவற வாழ்வைத் தேர்ந்து தன்னுடைய ஒவ்வொரு நொடிப்பொழுதையும் தமிழன்னைக்குத் தொண்டு செய்வதிலேயே நிறைவு செய்தவர். ஆயிரத்திற்கும் மேற்பட்ட அற்புதமான நூல்களை இயற்றி மொழிக்கு வளமை சேர்த்தவர். மகாகவி பாரதியார் நினைவு நூற்றாண்டு, வ.உ.சி. யாரின் நூற்றைம்பதாம் ஆண்டு, மகான் ஸ்ரீ அரவிந்தரின் 150ஆம் ஆண்டு, இவற்றோடு சுதந்திர அமிழ்தப் பெருவிழா ஆண்டினையும் கொண்டாடிக் கொண்டிருக்கிற இவ்வேளையில் சுத்தானந்த பாரதியாருக்கும் இது 125ஆம் ஆண்டு என்பது இனிமையை மேலும் கூட்டுகிறது. புதுச்சேரி ஆசிரமத்தில் 1927-லிருந்து ஸ்ரீஅரவிந்தர் அன்னையின் திருவடிகளில் சுமார் 20 ஆண்டுகளுக்கு மேலாக மௌன தவத்தில் ஈடுபட்டு வந்தவர்.. புதுச்சேரி புதுயுக நிலையம் அச்சகத்தில் தனது பாரத மகாசக்தி காவியம் என்னும் பிரமாண்ட படைப்பினை அச்சிட்டு வெளியிட்டு நமக்கு அளித்திருக்கிறார். இப்படைப்பினைப் பாராட்டித் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகம் அவருக்குப் ராஜராஜன் விருது வழங்கிக் கௌரவித்திருக்கிறது. கருவிலே திருவுடையவராகத் தோன்றிய சுத்தானந்த பாரதியார் எண்ணற்ற அருளாளர்களின் பேரன்புக்குப் பாத்திரமானவர் என்பதும் குறிப்பிடத்தக்கது. வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு என்று போற்றிப் பாடுகிற அந்தத் திருக்கூட்ட மரபிலே – சாது சங்கத்திலே தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டார்.



இதனை, “நான் செய்த மற்றொரு சாதனம் சாது சங்கம். என் கடமையளவே உலகுறவு. பிறகு தனிமை, அல்லது சாது சங்கம். சாது சேவை ஜீவசுத்தி தரும். ‘அதோ, நல்ல சாது, அவருடன் பழகு” என்று அந்தராத்மா காட்டும். அவ்வாறே செய்து பயன் பெறுவேன்” என்று தனது உள்ளத்து உணர்வை அப்படியே வெளிப்படுத்துகிறார். அத்தகைய அருட்குணம் கொண்ட சாதுக்கள் பலரில் நவமணிகள் என்பவர்களைத் தொகுத்து அவர்களுள் அரவிந்தரையும் தன் மனத்துள் நினைந்து போற்றுவதோடு அவர்தம் அருளும் உபதேசமும் தனக்கு வாழ்வில் எவ்வாறு உதவியது என்பதையும் பதிவு செய்துள்ளார். “நான் சுமார் நூறு அருட் பெரியாருடன் பழகியிருக்கிறேன். பூரணானந்தர், ஞான சித்தர், மூலயோகி, சித்தாரூடர், சாயிபாபா, ரமண மகரிஷிகள், அரவிந்தர், சிவானந்தர், மேஹர்பாபா இவர்கள் யோகவுலகின் நவமணிகள், இவர்கள் உறவு எனக்குப் பெரும்பயனானது. வேதரிஷிகள், வியாசர், சுகர், வால்மீகி, புத்தர், ஏசுநாதர், நபிநாயகம், லௌத்து, பரமஹம்ஸர், விவேகானந்தர், இராமதீர்த்தர்— முதலிய வேதவேதாந்த ரத்தினங்களுடன் நான் தியானவுறவு கொண்டு பயனடைந்தேன். என் உள்ளக் கிளர்ச்சிகளையும் முக்குண அலைகளையும், கவிதை நாடகங்களாகக் கோத்து கலைப்பணி செய்தேன். அதுவும் என்யோக சாதனத்தில் ஒன்று. சிலர், ‘யோகி நாவல் எழுதலாமா? நாடகம் எழுதலாமா?...” என்பர். என் உள்ளத்தில் பொங்கும் உணர்ச்சிப் படலங்களை வெல்வதற்கே அவற்றை எழுதினேன் என்பதை உலகிற்கு அறிவிக்கிறேன். எனது கதை, நாடகம், கட்டுரை அனைத்திலும் யோக விளக்கமே நடுநரம்பாயிருக்கும். இவ்வாறு சுத்தசாதனம் செய்த என்னைப் பெண் சக்தி சோதித்ததுண்டு. ஆனால் எந்தப் பெண்ணையும் நான் காம விழியுடன் பார்த்ததில்லை. என் இந்திரியம் வீணானதேயில்லை— இன்றும் பெண்ணைப் பராசக்தியாகவே வணங்குகிறேன். எனது பிரமசரியம் ஊர்த்துவ ரேதஸ் ஆனது. ஆண், பெண் வாழ்வைக்கூட யோகமாக்கலாம். இல்லறத்தில் இனிதிருந்தே யோகசித்தி பெறலாம். பெண்சக்தி ஆண்மைக்கு வீறும் திருவும் பொலிவும் தரும். ஸ்ரீ அரவிந்தர் அத்தகைய பூரண யோகத்தை எனக்கு விளக்கினார்” என்று போற்றுகிறார்.

பாரத தேசத்தையே மகாசக்தியாகப் போற்றுகிற பண்பினை மகான் ஸ்ரீஅரவிந்தரிடமிருந்தே சுத்தானந்த பாரதியார் கற்றிருக்கிறார். தேச சேவைக்கு யோக மார்க்கத்தையும் அவரிடமிருந்தே கற்றுக் கொண்டிருக்கிறார். “யோக சக்திக்கு, சக்திகுண்டமான பாரததேசமே தவநிலையம். நான் காணும் பாரததேசம் அமரத்தன்மை பெற்றது.

யோகசக்தி மின்சார நிலையமாவது. அதை பாரதசக்தி நிலையம் என்கிறேன். நான் வளர்த்த சம யோகத்திற்குப் பயிற்சிக்களன் பாரததேசம். யோகம் உயிர், தேசம் உடல்!. தேசபக்தி என்னுடன் பிறந்தது. எனது தேசபக்தி மேடைப் பேச்சன்று, தேர்தல் அமளியன்று. பாரத தேசத்திற்குரிய தூய தவசக்தியைத் தூண்டி, புலமையைத்தூண்டி, கல்வி கலை தொழில் வாணிகம், பொருளாதாரம், அருளாதாரம், சமயம், சமுதாயம் அனைத்திலும் அதைப்பரப்பி இந்தப் புண்ணியபூமியைச் சுத்தசக்தி யோகமாக்குவதே எனது தேசபக்தி. ஆனால் இதற்கு நாடு அடிமையாகாது, உரிமையுடன் தலை நிமிர்வது அவசியம். இந்த உரிமைகூட யோகசக்தியினால் வரும் என்பது எனது நம்பிக்கை. துருவன் தவத்தினால் நாடடைந்தான். அது போலவே, நாமும் நாட்டை மீட்கலாம். ஆனால் அன்னிய மாயம் நமது ஆத்ம சக்தி அடியோடொழிய, கஞ்சிக் கல்வியும், கைவிலங்கும் மாட்டிய பிறகு தவத்தை யார் கருதுவர்? நம் அடிமைத்தனத்திற்கு நாமே காரணம். உடம்பு சூடாயிருப்பது, சூட்டளவையின் குற்றமன்று. நாம் ஆசை யாணவம், சிறுமை பொறாமை இவற்றினின்று உள விடுதலை பெற்றால், உலகும் இயல்பாக விடுபடும். உலகம் என்பது மனத் தோற்றமும் மாற்றமுமே. ஆதலால் எனது தேச பக்தி தெய்வ பக்தியின் சாதனமானது. பாரத நாட்டின் ஆறு, மலை, காடு, கலை, ஆண், பெண் – எல்லாம் எனக்குப் பாரத சக்தி மயமாயின. அந்தக் காலம் ஸ்ரீ அரவிந்தரே எனக்கு ஆவேசம் அளித்தார். என் மூத்தண்ணா அவரது வந்தேமாதரத்தைப் படித்துப் படித்து அரவிந்தரைப் புகழ்வார். அவரது வீரவேதாந்தம் எனக்கு இளம்வயதில் பிடிபட்டது” என்று தனது பால்ய வயதிலிருந்து தொடங்கிய அரவிந்த உபாசத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

கவியோகியாரின் அற்புதமான படைப்பு – தமிழ்மொழிக்குக் கிடைத்த பெரும்புதையல் பாரத மகாசக்தி காவியமாகும். இதனை இயற்றுவதற்கு அவர் அரும்பாடுபட்டார். இதற்காக, தான் தவமிருந்த இடங்களைப் பற்றி விவரிக்கிற அவர், நிறைவாக அக்காவியம் புதுவையில் இருபத்தோராண்டுகள் மௌன தவத்திலிருந்து பெற்ற வலிமையினால்தான் முழுமையடச் செய்ய முடிந்தது என்பதையும் பதிவு செய்துள்ளார்.

“காடு மலை, வனம் ஆற்றங்கரைகளைத்தேடி அமர்ந்து, பாட்டெழுதுவதே என் அலுவலானது. இக்காலங்களில் என் உணவு வாழைப்பழமும் ஊறிய கொத்துக் கடலையுமே. கிடைத்த போது பால் அல்லது தயிர் சேர்த்துக் கொள்வேன்.

பாரத சக்தி சித்திகாண்டம், கௌரிகாண்டம், தானவ காண்டம் மூன்றும் எழுதப்பட்ட இடங்களாவன: பள்ளிக்கூடத்திற்குப் பின்னால் இருந்த தோட்டக்குடில், நெரூர் சதாசிவ சமாதி, ஸ்ரீராம சமுத்திரம் வால்மீகி நாதர் கோயில், பிள்ளையார் புத்தூர் மாந்தோப்பு, தலைமலை பெருமாள் கோயில் மண்டபம், கொல்லிமலைச்சரிவு, அரப்பளீசுர மலை கோயில் மண்டபம். நீண்ட விடுமுறை நாட்களில் யாத்திரை செய்து கொண்டே பாடினேன்.

திருவானைக்கா கோயில், ஸ்ரீரங்கம் கம்பர் மண்டபம், திருச்சி உச்சிப்பிள்ளையார் கோயில், லால்குடி, மயில்ரங்கம் ஆற்றங்கரைகள், சாத்தனூர் சத்திரம், கோயிலடி பெருமாள் கோயில், ராயர் சத்திரம், திருவையாறு கல்யாண மகால், சாமிமலை முருகன் கோயில், கும்பகோணம் மங்களாம்பிகை சந்நிதி, கும்பேசர் மண்டபம், திருநாகேசபுரம் கோயில் மண்டபம், திருவிடைமருதூர் கௌதம நிலையம், தருமபுரம் தோப்பு, கோவிந்தபுரம் பஜனை மடம், மாயவரம் வேதாந்த சுவாமிகள் மடம், குற்றாலம் பாபநாசம் கோயில்கள், சென்னை ஏகாம்பரேசர் கோயில் பின்மண்டபம், திருவொற்றியூர் பட்டினத்தார் சமாதி, தியாகராஜர் கோயில், திருத்தணி முருகன் கோயில், காளஹஸ்தி நதிக்கரையிலுள்ள சிவன்கோயில், கண்ணப்பர் மலை, திருப்பதி மலையில் பெருமாள் பிரகாரம், சோலை, பாண்டவ தீர்த்தம், தென்னாலி ஜைன மந்திரம், பெஜவாடா மலைக்குகை, மசூலிப் பட்டிணம் தேசியக்கல்லூரி, துறைமுகம், பூரி கோவர்த்தன மடம், ஜகன்னாதர்கோயில், காசி குமாரசாமி கட்டம், தசாஸ்வமேத கட்டம், ஹரித்வாரம் காங்கிரி குருகுலம், இமாலயம் உத்தரகாசி, கேதார், பத்ரி, அகஸ்திய குண்டம் முதலிய பல இடங்களிலும், திருக்குற்றாலம், கடயம், ஆழ்வார் திருநகரி, திருச்செந்தூர், குமரிமுனை முதலிய இயற்கை வனப்பு நிரம்பிய இடங்களிலும் அமர்ந்து தியான சுகத்தில் பாரதசக்தி காவியத்தை எழுதினேன். ஒரு மணி தியானிப்பது, உடனே எழுதுவது, பிறகு தியானிப்பது வழக்கம். வற்புறுத்தி எதுவும் எழுதுவதில்லை. காலை நான்கு மணிமுதல் எட்டுமணி வரையில் எழுதுவது*ƒ* பிற்பகல் மூன்று முதல் ஐந்து வரையில், பிறகு மாலை தியானாதிகள் ஆனபிறகு, பத்து மணி வரையில் எழுதுவதுண்டு. அதன் பிறகு சமாதியிலிருந்து சக்தியை வளர்ப்பது உண்டு. இந்த மாதிரி மூன்று



காண்டங்கள் உருவாயின. நான் தேவகோட்டை தேசீயக் கலாசாலையிலிருந்தபோது பாரத சக்தியை முதல் தடவையாக முடித்தேன். பிறகு வ.வே. சு.ஐயருடன் குருகுலத்தில் புதுக்கி எழுதினேன். அதன்பிறகு எனது கையெழுத்துப் பிரதிகள் கறையான் அரிக்க நேர்ந்ததால், பாமணியில் மறுபடி மௌனவிரதம் பூண்டு எழுதினேன். அதன் சில பகுதிகள் ஒற்றறிடம் சிக்கின. ஸ்ரீஅரவிந்த ஆசிரமத்தில் இருபத்தோராண்டுகள் மௌனம் பூண்டு, தவம்புரிந்த காலத்திலேதான், பாரதசக்தியை நன்றாகச் செப்பனிட்டு வெளியிட முடிந்தது" என்று கூறியுள்ளார்.

தொடரும்....

முனைவர் சொ. அருணன்

# ஸ்ரீஅரவிந்தர் – 150...

ஆரோவில் தில்லைகணபதி படைத்தளிக்கும் அரவிந்தம்

ஸ்ரீஅரவிந்தரின் காலண்டரில்
1901
ஒரு முக்கிய ஆண்டு
இந்த ஆண்டே...
அவர்
மிருணாளி தேவியுடன்
மாலை சூடிய
வேளை கண்டது
இந்த ஆண்டில்
புரட்சிக் குழுக்களை
தயார் செய்ய
திரை மறைவு
நாடகம்
அரங்கேறியது
ஒரு கையில் வாள்
இன்னொரு கையில் கீதை நூல்
இந்தியத் தாயின் விடுதலையே
இலட்சியம்
என்ற
சபத மாலையைப்
போட்டுக்கொண்டார்.
1905
ஆங்கிலேய
கருப்புச் சட்டத்தாலும்
காக்கிச் சட்டையின்
வலிமையாலும்
ஒன்றுபட்ட வங்கம்
இந்திய வரைபடத்தில்
இரு துண்டுகளாயின. .



(மேலும்மலரும்)

# கவிதைப் பயிற்சிப்பட்டறை

நமது மடல் வாசகர் திரு. தஞ்சாவூர்க் கவிராயர் நமது இளைஞர்கள் பங்குபெற்ற கவிதைப் பயிற்சிப் பட்டறை விளைச்சலைப் பாராட்டி பரிசளித்துள்ளார். நன்றி.

**கவிதைப் பட்டறை அறுவடை (தொடர்ச்சி)**

பட்டப்பகலிலே
பங்குனி வெயிலிலே
பார்த்துச் சிரிக்கும்
ஊதா இலைப் புதுச்செடியே
உன் பூவும் ஊதாநிறம்

நீ சொல்ல வரும் கருத்தென்ன?
கேட்பதற்கு யாருமில்லையா?
என் மனம் இயற்கைமுன் தலை வணங்கும்
உன் மொழி ஏற்கும்.

மு. கலைப்பிரியன் 11 – ஆம் வகுப்பு, மகாவீரபுரம்.

ஊதா இலைச் செடியழகு
கண்ணன் தலைமேல் மயில் இறகு போல!
கண்ணுக்குப் பேரழகு.
செடியே நீயே கண்ணனாகிறாய்!
சூட்டுகிறேன் என் கவிதை.

வேல்முருகன், விவசாயி, பொம்மையார்பாளையம்.

ஊதாச்செடியே
உன் ஊதா நிறம்
என் சினத்திற்கு மாற்றம்
மனம் ஏற்றது சாந்தம்
நன்றி சொல்கிறேன்
சின்னஞ்சிறு வண்ணச்செடியே
உன் எழில் கண்டு
என் கர்வம் தளர்ந்தது
என் மயக்கம் மெலிந்தது
நீ வளர்ந்திடுக
நேசம் வளர்த்திடுக
வாடாத உன் இலை வடிவம்
காட்டும் காட்சியிலே
கூட்டுக் குடும்ப மனநெருக்கம்
அறிவின் தெளிவிலே உறவின் பெருக்கம்

திருமதி தேன்மலர் சங்கர், மாத்ரிமந்திர், ஆரோவில்.



# நடு நாட்டுத் திருக்கோவில்களும் தலமரங்களும்

| வ.எ | தலம் | ஊர் | மரம் | இறைவன் |
|---|---|---|---|---|
| 1 | திருஅண்ணாமலை | திருவண்ணாமலை | மகிழம், ஆல் | திருஅண்ணாமலையார் |
| 2 | திருஅதிகை வீரட்டானம் | திருஅதிகை | கொன்றை | வீரட்டேஸ்வரர் |
| 3 | திருஅறையணிநல்லூர் | அரகண்டநல்லூர் | வில்வம் | ஒப்பிலாமணீஸ்வரர் |
| 4 | திருஆமாத்தூர் | திருஆமாத்தூர் | வன்னி | அபிராமேஸ்வரர் |
| 5 | திருஇடையாறு | திருஎடையார் | மருது | மருதீஸ்வரர் |
| 6 | திருஇலம்பையங்கோட்டூர் | இலம்பையங்கோட்டூர் | மல்லிகை | சந்திரசேகரர் |
| 7 | திருஊறல் | தக்கோலம் | வால்மிளகு | ஜலதாதீஸ்வரர் |
| 8 | திருஒற்றியூர் | திருஒற்றியூர் | மகிழமரம் | ஆதிபுரீஸ்வரர் |
| 9 | திருஓணக்காந்தன்றளி | பெரியகாஞ்சிபுரம் | வில்வம் | ஓணகாந்தேஸ்வரர் |
| 10 | திருஓத்தூர் | திருவத்திபுரம் | பனை | வேதபுரீஸ்வரர் |
| 11 | திருத்துறையூர் | திருத்தளூர் | கொன்றை | சிஷ்டகுருநாதர் |
| 12 | திருநாவலூர் | திருநாமநல்லூர் | நாவல் | நாவலேஸ்வரர் |
| 13 | திருநெல்வாயில் அரசத்துறை | திருவட்டத்துறை | ஆலமரம் | தீர்த்தபுரீஸ்வரர் |
| 14 | திருநெல்வெண்ணெய் | திருவட்டத்துறை | புன்னை | சொர்ணகடேஸ்வரர் |
| 15 | திருப்பாதிரிபுலியூர் | திருப்பாபுலியூர் | பாதிரி | பாடலீஸ்வரர் |
| 16 | திருப்புறவார் பனங்காட்டூர் | பனையபுரம் | பனை | திருப்பனங்காட்டு ஈஸ்வரர் |

தகவல்:- நூல்: **தலமரங்கள்** | ஆசிரியர்: **டாக்டர் கே.கே.சுந்தர சோபிதராஜ்**, எம்.ஏ பிச்டி | வெளியீடு சோபிதம், சென்னை | 1994. **(வளரும்)**









சிறுவர் இலக்கியம்

## குழந்தைகளுக்கான தாலாட்டு (தெலுங்கு மொழித் தழுவல்)

ஆஈ ஆஈஇ
ஆஈ ஆஈஇ
நித்திரை போ
நித்திரை போ

சின்ன மகனேஏஏ
நித்திரைக்குள்ளே தூங்கியெழு
மகனேஏ (ஆஈ)

மலையே மலையே
எந்த ஊர் மலையோ
தீர்க்கமா இருக்குதே
திருப்பதி மலையே (ஆ.ஈ.)

மலையைச் சுற்றி
கோதுமை வெதச்சு
கோதுமை எல்லாம்
மலைஉயரம் ஆச்சு. (ஆ.ஈ.)

பாகல் இளங்கொடிக்கு
பூக்கள் அழகாம்
பாருங்கள் நம் குழந்தைக்குக்
கண்களே அழகு (ஆ.ஈ.இ)

எல்லார்க்கும் மாமனாம்
அம்புலிச் சந்திரரே
நம்ம பிள்ளைக்கு மாமன்மார்
ராம இலட்சுமணரே (ஆ. ஈ. இ)

- மதுரை மகள்

## சித்தாஞ்சலி



ஆரோவில் சாவித்ரிபவன் நிர்வாகப்பொறுப்பை வகித்தவரும், மாத்ரிமந்திரின் ஆரம்பகால ஊழியருமான ஆசிரியை கவிஞர் ஷ்ரத்தவான் (இங்கிலாந்து) அவர்கள் ஸ்ரீஅரவிந்த அன்னையின் திருவடியில் இணைந்துவிட்டார். “சாவித்ரி“ வாசிப்பில் அவரது குரல் ஒலி நம்முடன் நிலைபெற்றுள்ளது. அன்னையே சரணம். ஓம் சாந்தி

## அறிவோம் நம் தமிழ் - V
### தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

I. DAM - அணை
சிறை
படை
கங்கு
பேரணை (மிகப் பெரிய அணை)
குரம்பு (சிறிய அணைக்கட்டு)

II. DANCE - நடனம்
நாட்டியம் | கூத்து
தேசி (ஒரு வகைக் கூத்து)
சக்கடி | புகழ்க் கூத்து
தோரியம் | துணங்கை
தானகம் (கூத்து வகை)
பரவை
நட்டு
செக்கணி (நாட்டியத்தில் ஒரு வகை)
திமிதம் (குதித்து ஆடும் நடனம்)
சதிர்
கோற்கூத்து
பணிக்கன் (நடன ஆசிரியர்)
நட்டுவாங்கன் (நடன ஆசிரியர்)

நன்றி: **ஆங்கில - தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.**
International Advanced Deluxe Dictionary.

### ஸ்ரீஅரவிந்தரின் சிந்தனை மணிகள்

மெய்மையின் சாயலையும் சின்னத்தையும் வழிபடும் அதே நேரத்தில் மெய்மையைப் புறக்கணிக்கும் அல்லது வெறுத்தொதுக்கும் உன் மனித இயல்புக்கு எதிராக எப்போதும் நீ விழிப்புடன் இரு. தீமைக்கு வாய்ப்பளிப்பது மனிதரின் தீய இயல்பன்று. மனிதரின் பலவீனமேயாகும்..


### தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

Unit of Sri Aurobindo International Institute of Educational Research

மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.